உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருப்பேரூர்
# ஸ்ரீ பட்டிவிநாயகர் மாலை.


இஃது

கோயமுத்தூர்

மகாவித்துவான் ம-ள-ஸ்ரீ ம. சந்திரசேகரம்பிள்ளையவர்கள்

மாணாக்கர் குழாங்களிலொருவரும்,

போளிமாம்பட்டிக்கருணீகருமாகிய

**ஆறுமுகம்பிள்ளையவர்கள்**

இயற்றியது.



கோயமுத்தூர்

கே. ஆர். வி. அண்டு கோ. அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1896.

போன்வாம்பட்டி ஆறுமுகம் பிள்ளை.

## ஆசிரியர்வணக்கம்.

---

திருவாழுமழகுமுகன்சிறப்பேறுங்குணமுளாகன்சிவத்தின்செ ந்தா, மரைவாழுந்தேன்றதும்பும்வாய்வளரும்பிரசங்கமாரி யாலன்,பரைவாழுமனக்கோயிற்பரவுமிருமிருளகற்றிப்பண் பாற்போற்றும்,பரைவாழும்பாகமுடைப்பண்ணவனைப்பிரதி ட்டைபண்ணுமாசான்,

வேறு.

மந்திரமாவதுநீறென்றேவகுத்துச்சுரநோய்தன்னோடு
பந்தமறுத்தசம்பந்தன்பரமகுருவேயானற்போ [தி
லெந்தன்சொந்தமனப்பாறையிடத்தேயடித்தாமரைமலர்த்
முந்தும்வினைகடீர்த்தமகாமுனிமாதவத்திலவதரித்தோன்,

மதுரையிருந்தசங்கமதைமாற்றிக்கைலேயிடத்தமைத்த
விதமதென்னிலிவ்வாசான்விரும்பிவருவான்வந்திடிலோ
யுதவியிருந்தபலகையுவந்துள்ளபுலவர்தமைத்தள்ளிப்
பதவிகொடுக்கப்பெறுவானும்பார்ந்துவெட்கப்படவேண்டும்

என்னுங்கருத்தாலென்றறிந்தாங்கோரார்கைலேதனின்மேவி
மன்னும்புலவரொடுமெருவிவாழும்பரமற்கடுத்தலக்கந்
தன்னிலிருந்துசிவானந்தந்ததும்புஞ்சந்த்ரசேகரன்றன்
பொன்னின்பதமேதுணையாகப்போற்றிப்புகல்வாமிந்நூலே.

---

உ

சிவமயம்.

# சாற்றுக்கவி.

---

இஃது
கோயமுத்தூர் இன்ஸ்பெக்டிங் ஸ்கூல் மேஸ்டர் பென்ஷனர்
வீராட்சிமங்கலம் தமிழ்ப்புலவர் மகா-ள-ஸ்ரீ
தி. சிவன்பிள்ளையவர்களியற்றியது.

—

வெண்பா.

உருக்கு மனத்தை யுருக்கி வயமில்
செருக்கினை மாற்றுந் திறனுட்ப—பெருக்கமுற
ஆறுமுகப் பிள்ளை யமைத்ததிருப் பாமாலைக்
கேறு கவியுளவோ வீண்டு.

---

இஃது
லண்டன் மிஷன் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர் மகா-ள-ஸ்ரீ
ச. திருச்சிற்றம்பலம்பிள்ளையவர்களியற்றியது.

—

வெண்பா.

பட்டிக் களிற்றின் பதாம்புயத்தோர் பாமாலை
கட்டிக் களித்தானிக்காசினியிற்—சிட்டர்புகல்
ஆறு முகம்பிள்ளை யவன்றிறத்திற் கொப்புரைக்க
வேறுதிற முண்டோ விளம்பு.

இஃது
"வலிய கலியுக ஹரதத்தாசாரிய ரென்னும்" சாமக்குளம்
பிர்மஸ்ரீ வெங்கடரமணதாசரவர்களியற்றியது.

—

வெண்பா.

ஆறுமுகங் காட்டி யடுத்தோரை யாதரிக்கும்
ஆறுமுக வேள்பட்டி யைங்கரற்கின்—ஞாறுமுகச்
செவ்வே டருதமிழாற் செட்டானோர் மாலையது
செவ்வே பலர்புகழத் தேர்ந்து.

கண்டோ கனியோ கரும்போ கமழ்தேனோ
செண்டோ டிணைமுலையார் செவ்விதழோ—கண்டோர்
மதிக்குஞ்சொல் லாறுமுக மன்களிற்றை யிங்கு
துதிக்குந் தமிழின் றொடர்.

---

இஃது
கோயமுத்தூர் கனம் ஸ்டேன்ஸ் துரையவர்கள் ஹைஸ்கூல்
தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீவில்லிப்புத்தூர் மங்கலம் பிர்மஸ்ரீ
ஸ்ரீனிவாசய்யங்காரவர்களியற்றியது.

—

வெண்பா.

பட்டி விநாயகரின் பாதத்திற் செந்தமிழாற்
கட்டி வியன் மாலைதந்து கண்களித்தான்—சிட்டர்புகழ்
ஆறுமுகப் பேரா னவனுரையைத் தேர்ந்துசொல
வாறுமுகங் கொண்டான்வே ளாய்ந்து.

இஃது
கோயமுத்தூர் டிஸ்திரிக்டு முன்சிப்கோர்ட்டு வக்கீல் ம-ா-ஸ்ரீ
*G.* வீராசாமிபிள்ளையவர்களியற்றியது.

—

வெண்பா.

ஆறு முகம்பிள்ளை யன்பாகச் செந்தமிழ்த்தே
னூறுங் கவிமாலை யொன்றிசைத்துப்—பேறுதவு
பட்டிக் கணபதிக்குப் பண்பாய்ப் புனைந்ததனு
லெட்டுத் திசைமணந்த தே.

கையளவு கற்றுக் கடலளவு தற்புகழும்
பொய்யளவு சேர்நாப் புலவர்காள்—வையமிசைப்
பீடுபெறு மாறுமுகம் பிள்ளையைப்பார்த் தானுலு
நீடுபுகழ் தேடீர் நிதம்.

———

இஃது
குணியமுத்தூர் மாஜீ கர்ணம் ம-ா-ஸ்ரீ
கறுப்பண்ணபிள்ளையவர்கள் இயற்றியது.

——

திருநாதன்வெண்கமலைகொழுநனருங்காலவனித்திறத்தோர்க்கார்வந், தருபாதநடம்புரிந்தசிவபெருமானுறைபேரைத்தலத்தின்மேய, வொருகோடார்பட்டிவிநாயகமாலைமாயைதபவுரைத்தான்வானத், தருவேங்குபொழிற்போளன்பட்டிநகராறுமுகன்றமிழ்வல்லோனே.

கோயமுத்தூர் டிஸ்திரிக்டு முன்சிபுகோர்ட்டு வக்கீல் ம-ா-ஸ்ரீ
ஹரிராம் மிசரவர்களியற்றியது.

வெண்பா.

பட்டிக் கணபதிக்கோர் பாமாலை சூட்டுவனென்
றெட்டிப் பிடித்தான்கா னின்னடிக—ளெட்டுத்
திசைமுழங்க வென்னச் சிறியர் பெரிய
ரிசைவளர்த்தா ஞறுமுக னே.

---

மகா-ா-ஸ்ரீ ச. திருச்சிற்றம்பலம்பிள்ளையவர்கள் மாணுக்கர்
திருக்கண்ணபுரம் வித்துவான் பிர்மஸ்ரீ
P. R. கிருஷ்ணமாசாரியாரவர்களியற்றியது.

வெண்பா.

துதிக்கைக் கரியானைச் சோதி நெடுமாலுந்
துதிக்கைக் கரியானைச் சொன்ஞன்—விதிக்கைக்கு
மந்தகற்குந் தப்புவா ஞறு முகம்பிள்ளை
செந்தமிழ்நூன் மாலை தெரிந்து.

---

மகா-ா-ஸ்ரீ ச. திருச்சிற்றம்பலம்பிள்ளையவர்கள் மாணுக்கர்
ம-ா-ஸ்ரீ ச. நடேசபிள்ளையவர்களியற்றியது.

—

பொன்னமர்சோலைசூழ்ந்தபோளிமாம்பட்டிமேவி
யன்னைபோலரந்தைதீர்க்குமாறுமாமுகப்பேர்ச்சிலன்
பன்னருஞ்சிறப்பின்பட்டிவிநாயகன்பதத்திற்சேர்த்தான்
கன்னலுமமுதந்தோற்குங்கவிமணிமாலைமாதோ.

இஃது
மகா வித்துவான் கந்தசாமி முதலியாரவர்கள் குமாரரும்,
ம-ா-ஸ்ரீ ச. திருச்சிற்றம்பலம்பிள்ளையவர்கள் மாணாக்கருள்
ஒருவருமாகிய ம-ா-ஸ்ரீ
C. K. சுப்பிரமணிய முதலியாரவர்களியற்றியது.

---

மாதந்தமென்றுநடமாடுபேரைவளர்கின்றபட்டியெனுமோர்
தூதந்தவேழமுகனுரிரண்டுசுடர்விட்டிலங்குமரையாம்
பாதந்தமுள்ளமிசைவைத்தவந்துபணிகின்றவாறுமுகனுங்
கோதந்தமாலைபயில்வார்களண்டைகுறுகாதுகன்மவினையே.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருப்பேரூர்

# ஸ்ரீ பட்டிவிநாயகர் மாலை.

காப்பு.

சீரார்மூர்த்திதலந்தீர்த்தஞ்சிறந்ததென்றற்கறிகுறியா
யேராமயமும்புளிபனையுமிருத்திக்காட்டும்பேரூரிற்
றீராவினைகடீர்த்தருளுந்திருவேபட்டிவிநாயகனே
நேராயுனதுமேன்மாலைநிகழ்த்தநினதுபதங்காப்பே.

நூல்.

யானைகுதிரைமீதேறியரியகைலைசெலுமடியார்
சேனைதனக்குமுன்செல்லத்தெரிவைதன்னைச்செலுத்தியநீ
மானைநிகரும்விழிமாதர்வலையிலொருங்கேசிக்கியலே
வேனையொருநெற்கிடைகடத்தவேண்டும்பட்டிவிநாயகனே.

ஒப்புமுயர்வுமில்லாதவுன்றன்றந்தைசுந்தரர்க்காய்த்
தப்பென்றதவும்பாராமற்றையவிடத்திற்சந்தானு [னைத்
னப்பவதுபோற்செயவேண்டாமயில்வேற்கண்ணாராசையி
தப்பவைத்தென்றனையாளத்தகாதோபட்டிவிநாயகனே. (2)

அப்புவழியிலரசுமுதலடியிற்பட்டிபாளையத்தி
லொப்பமுடியவிருந்தருளியுள்ளங்கெட்டகள்வர்முதற்
றப்புவழியினடப்போர்க்குஞ்சகலவரமுங்கொடுத்தவருள்
செப்புத்தனத்திற்சிக்கிவழிதேடுமெடியேற்கேனிலையே. (3)

அங்கப்பமுதொன்றில்லாதவவரேகருமமிரண்டிடத்துந்
தங்கவமைத்துப்பூசிக்கத்தக்கோரென்றுவேதமுறை
யெங்குமிடுவதறிந்திருந்துமிம்பரும்பரியாருமுனைக்
கொங்குவிரியுமலர்கொண்டுகூர்ந்துபோற்றுமியல்பென்னே.

எவர்களெந்தத்தொழில்செயினுமேனேவுனைமுன்பருச்சிப்
ப,தவர்களந்தப்பணிக்குவிபத்தணுகுமென்பதமைவுடைத்தா
ற்,றவறிற்சிறந்தபொருமைமுதற்சார்ந்தகொடியையென்றன்
றோ,சிவனும்புரத்தாரொடுசெய்தசெருவிற்றெரிந்தநின்செய
லே. (5)

பகாமுடியாவினியசுகம்பார்க்கிலுலகிற்பாதிமதி
நிகருநெற்றிமாதரிடம்நிலைக்குஞ்சுகமேசுகமெனவோர்
பகலினெடியும்பிரிந்திலனைப்பழகுமடியனதைவிடுத்து
நகரப்பணித்தியாமாயினுளுமறவேனுயகனே. (6)

உன்னைமுதலில்வணங்காமலுற்றதொழில்களெல்லாமுர், பி
ன்னஞ்செய்வையென்பதெல்லாம் பேச்சேயன்றிமெய்யானு
ற், கன்னலமுதம்புளிக்குமிதழ்க்கனிவாய்மகளிரொடுமுயங்
கு, மன்னதொழிலேயெனதுதொழிலதிலேன்மனப்பற்றறவி
லையோ. (7)

ஆசைக்கடலிற்கிடந்தமுதையளிக்குமிதழாரருங்கலவிப் [ய்
பாசக்கடலிற்பட்டலைந்துபதைக்குமெனக்கோர்புணைதருவா
நாசமடைந்திட்டவர்களென்னைநாளுங்கற்செய்காஞ்சிநதி
வீசமணிகடுறைகடோறும்விளங்கும்பட்டிவிநாயகனே.

ஒன்றைநினைந்து மற்றதெலாமொருங்கேதுறந்தோரொப்பில்லா, ரென்றுசொன்னமுறைப்படியேயெல்லாந்துறந்தேனொண்டொடியார், துன்றுபோகமொன்றுமட்டுந்துறவாதுற்றேனெப்பவர்யார், நன்றுநோக்கினுன்முதலேநவிலநிற்பேனுயகனே. (9)

## வேறு.

கற்றவர்கல்லார்கலந்திடுமுலகிற்கணக்கிலகற்றவன்யானே, மற்றவர்யாருங்கற்றதைச்செய்யார்மன்னியயானதேசெய்வேன், றெற்றெனவிளங்குங்காமநூலொன்றேதெரிந்ததுதெரிந்தவப்படியே, யுற்றனன்புலவர்சொற்றதுமீதேயுறுதிநீயேனருளிலையே. (10)

## வேறு.

ஏழையென்றுகண்டுகொண்டபிறகுநீதானெந்தவனியாயந்தானிசைந்துசெய்யாய், வாழுமறையவன்மகனையரிந்துமற்றோர்வணிகனவன்றன்மனைவிவாங்கிப்பின்னுந், தாழுமணமகன் மணக்குங்குழலறுத்துத்தகாதபணிபலசெய்தசங்கரர்க்கு, வேழமுகப்பிள்ளையென்பதறிவனுனி, விரும்பியிடும்பணியொன்றுமேவிடேனே. (11)

## வேறு.

பதிபசுபாசமென்றிடுமூன்றும்பகர்ந்திடிலனுதியேயுளதப், பதியெதுவதுநீபசுவெதுவதுநான்பாசமோவெனதுநற்சொந்தம், விதியிதுவதனால்விளங்கியமாயைவினைகிடந்தலைப்பவேருகித், துதிபுரிந்துன்னைப்பணிந்திலேனென்மேற்றேடமொன்றில்லையாண்டவனே. (12)

அனுதியேயிருந்தவினைமுதலனுவேயசலமாய்வளர்ந்தெனைவருத்திப், பனுதியாய்ச்செய்துபண்ணியகூத்தைப்பார்த்துநீபரிசெதுகொடுத்தா, யெனுதியேயானுமிதுவரையலைந்தேனினிமுடியாதுநீவிட்டா, லனுதரவுடையேனறிந்தெனையாள்வாயானைமாமுகமுடையமுதே. (13)

## வேறு.

முன்னமிருந்தமுதலொன்றைமுறித்துச்செலவுசெய்யாமலன்னமுதலைப்பலவனந்தமாக்கிப்பிழைக்குமரியமகன்றன்னைக்கண்டுதந்தைகொண்டசந்தோடம்போனீகொள்வையென்னுங்கருத்தைக்கொண்டுவளர்த்திட்டேனிருந்தவினைதனையே. (14)

கண்ணியொட்டுவலையதனுற்கருதிப்பிடித்தபறவைதனையெண்ணிக்கொடுத்துவிலைவேடர்க்கிரங்கிவிடுக்குமவர்போலமண்ணும்பெண்ணும்பொன்னதனுன்மயங்கப்பிடித்தமாயையெனை, யண்ணல்விலையுமிலைவிடுதியென்றூல்விடுவனறமபெரிதே. (15)

வேறு.

விலங்குபுண்ணரர்கடேவர்விரிந்தபுன்மரங்களாதி
நலங்கெடுபிரமமென்றேநான்றுகொள் சமயஞ்சார்ந்து
மலங்கெடாதிருந்ததாலேமகளிரேதெய்வமென்னும்
பலங்கெடுசமயவாழ்வேபலித்ததுபார்த்தாள்வாயே. (16)

வேறு.

தந்தைதன்புதல்வன்றனக்கொருபிசாசஞ்சார்ந்தவன்றலைத
ளையாட்டும், விந்தையைக்கண்டால்விடுவனோவிரங்கிவேண்
டியமணிமருந்தாதி, முந்தவேசெய்தப்பேய்தனைத்துறத்திமு
ற்றியகுதுகலமடைவா, னெந்தையேநீயுமெனைப்பிடித்தாட்டு
மிரக்கமின்மாயைதீர்த்தருளே. (17)

வேறு.

பதியும்பாசமெனுமிரண்டும்பார்க்கிலுயர்வுதாழ்வாகும்
பதியும்பசுவென்பதிலொன்றைப்பற்றிக்கிடக்குந்தீப்போலப்
பதியைப்பற்றிக்கிடவாமற்பாசம்பற்றியலைவேற்கவ்
விதியைத்தொலைத்துன்றனைப்பற்றிவிளங்கவருள்செய்விநா
யகனே. (18)

அன்பாயினித்தமோதகம்வைத்தடியருன்னைப்பணிந்தருளைத்
தென்பாய்ப்பெறுவாதுசெய்திதெரியுமெனக்குமவர்க்குள்ள
வன்பாயினிக்குமகமில்லையரியகாமமோதகமுண்,டென்பால
ருள்வைத்திட்டக்காலெளியேனுனக்குமளிப்பேனே. (19)

எங்குந்தோற்றுமணி விளக்கேயில்லா தில்லாப்பெருவாழ்வே,
தங்குமென் றன் வினையறையைத்தானே சுடுதியிலையென்றூற்,
றங்கமாகுமாகுவுக்குச்சாடைகாட்டிவிடுவையெனி,லெங்குமி
ல்லேவினையென்றேயெல்லாந்தின்றீடேற்றுவனே. (20)

வேறு.

கடல்குடித்தகுறுமுனிவனடக்கிவருங்காவிரியைக்கவிழ்த்துப்
போற்று,மடலவிழ்தாமரைமுதலாமலர்வேண்டிமன்மதன்வ
ந்துலவுதிருமருதஞ்சூழ்ந்த, விடலரிதாம்பூமியிடைவிடுத்தரு
ளிமேதினியோர்க்கமுதளித்தவிமலாவுன்றன்,றடம்பெறுமா
வருணதியைத்தான் விடுத்துத்தமியன்மடந்தடுத்தாளத்தயை
செய்வாயே. (21)

வேறு.

அங்குசபாசமென் னுநற்பொருள்களணிந்திடுந்தேவனேயெ
ன்றன், பங்குறைபாசமிகப்பெரிததனைப்பற்றியுன்பாசமதுத
வி, வெங்குறைநீக்கியாளுவையானுன் மீந்தமற்றங்குசந்தன்
னைச், சங்கையினுனேவிடுத்துமெட் ஞானந்தனையடைந்துய்கு
வனெந்தாய். (22)

வேதனேவிண்ணோர் விமலனேயெங்கும்வியாபகமாகிநின்ற
வனே, நாதனேவிதிமானண்ணிநின்றேத்துநல்லருட்டேன்பு
குநளின, பாதனேபணிபுநம்பியாண்டவர்க்குப்பதமுறுதொ
ண்டர்தஞ்சரித, போதனேயடியேன்வாக்கிருந்துன்னைப்புகழ்
ந்திடுபாடறந்தருளே. (23)

அசுரர்கடமக்குவிடமருந்தமரர்க்காகியவாகுவாகனனே, யெசுர்முதன்மறைகட்கிறைவனேயெங்குமியாவுமாயிருந்தருள்சுரக்கும்,பசுபதிபுகழும்பாலனேயுன்னைப்பணிந்திடுமடியர்கள்பலருட், கொசுகளவேனுங்குறித்திலாயென்னைக்குறைகழலன்றிவேறிலனே. (24)

வேறு.

இகழ்ச்சிவரிற்குதூகலிப்பும்புகழ்ச்சிவரிற்கடுகெடுப்புமியல்பாயென்ற, விகழ்ச்சியிதற்கடையாளநீலவிழிமாதரடநாய்சியென்னின், மகிழ்ச்சிவருமாதவத்தோர்நீயென்னிற்கடுங்கோபமெய்துமீதன், பகத்தில்வளர்ந்துனைப்பணியாதிருந்தமலமதைநீக்கிப்பாலிப்பாயே. (25)

வேறு.

அன்புகருணைகொடைமுகமனடியேனிடத்துமுளவாறு
லின்பமளிக்குமகளிரிடமிருந்ததன்றியேனையவர்
முன்புவந்ததறிந்திலனுன்முடுகிவருவானெமனிடத்தவ்
வன்புவருமோவாராதோவறியேனுனைமுகத்தோனே. (26)

வேறு.

ஏமனேமிகக்கொடியனெழுதுபடங்கண்டாலேதெரியுமுன்னை, நேமமோடிருந்தொருநாளாகுலும்பணிந்ததிலைநிற்கமற்றோர்க், காமனவிலேனுமொருபொருளளித்தாதரித்ததிலையையாபோதர், தாமமார்புயச்சமனூர்க்கென்னுரைப்பேனின்றுமஞ்சாற்றவருடான்செய்வாயே. (27

வேறு.

அன்னேயைப்புணர்ந்துந்தந்தையைக்கொன்றுமமர்ந்தமாபா
தகமதுரை, தன்னிலேதீர்த்தாதரித்தவுன்றந்தைசமர்த்தது
போலநீபிள்ளே, யின்னமுஞ்செய்யாதிருந்திடல்பழியேனே
ற்றிடல்வேண்டுமோவென்னேப், பின்னியபாவந்தொலேத்த
ருள்வாயேற்பின்ஞெருபழியிலேயெந்தாய். (28)

பெண்ணென்ருற் பேயுமிரங்குமென்றுலகோர்பேசியமாற்ற
மாரறியா, ரண்ணலேகொஞ்சமறிவுடைநரனுயமர்ந்தநான
வர்கண்மேலிரக்க, நண்ணன்மாபெரிதோநாரியரின்சொன
ளினமாரமுதமும்வேம்பா, யெண்ணலும்வருமோவெண்ணி
டிற்பேய்க்குமிரிந்தலோதிரிந்திடல்வேண்டும். (29)

வேறு.

பாலர்கிழவரென்போர்மேற்பட்சமுடையோரொப்பில்லார்
சாலுமாற்றங்குறித்தெமனேத்தந்தையுதைத்தார்பாலற்காய்
நாலுமறையுந்தொழும்பிள்ளேநாதாகிழவனுனென்மேற்
காலன்கடுகிவாராமற்காத்திட்டப்போர்காண்குவையே. (30)

---

முற்றிற்று.

# கட்டளைக்கலித்துறை.

நீருட்கிளம்புங்குமிழியுமின்னலுநேருமென்ப
ராருமுடற்பொருளாங்கவர்க்கேதருமன்றியெற்கு
நேருமிரண்டுமெக்காலமுநின்றிடுமென்றுகொண்டு
பாரிலுனையிதகாறும்பணிந்திலன்பண்ணவனே. (1)

நீங்காதசெல்வநிலைநிற்குந்தேகமுநிச்சயமென்
றுங்காரமிக்கொண்டணங்கனையார்விழியம்புபட்டுத்
தாங்காதலைந்தலைந்தோய்ந்துவிட்டேனினித்தாயனையா
யேங்காதருள்செயிலெஞ்ஞான்றுமெய்ஞானமெய்துவனே.

மாற்றனவின்றிவளர்தங்கமேயுனையான்பணிவ
தேற்றமொன்றல்லவென்றேற்றிடுவாயுனக்கேற்றிடுமோ
காற்றனவின்றிச்செறுமிடத்தேயொருகால்விளக்கை
யேற்றிவளர்த்திடலன்றேபுதுமையிபமுகனே. (3)

தனிவள்ளனியென்றுசாற்றியவாரணத்தன்மைகண்டு
நனியுனைவேண்டிநின்றேலமிட்டேனொருநாளுவந்து
தனியனையேனென்றுகேட்டிலையேயென்னதனிவள்ளனி
கனியருடந்தெனைக்காப்பதுன்பாரங்கணபதியே. (4

கணபதிபூசைக்குக்கைமேற்பலனென்றுகாசினியோர்
மணமொடுபேசுவரென்செவிக்கெட்டியுன்மாமலர்த்தாட்
குணமொடுவாழ்த்திக்குறிலறுமினுங்குன்றெறிந்தோன்
கணமொடுபோற்றுங்கரைகேட்டுவந்திலன்காத்தருளே. (5)

---

சிவமயம்.

தவம்பெற்றவள் துணை.

சேற்றூர் மஹாராஜா அவர்கள் எழுமலைச் சமஸ்தானத்தைக் கைக்கொண்டபொழுது ஷை மஹாராஜா அவர்களின் வித்யாகுருவும் சமஸ்தானம் மஹாவித்வானுமாகிய இராமசாமிக் கவிராயரவர்கள் இயற்றியன.



கந்நாமஞ் சுமந்துவட மலைத்திருவ
னெனும்பெயரு நாட்டினன் மால்
எந்நாளு மவன்றனது நாமமெழு
மலைத்திருவ னென்பா ரென்றே
தன்னாமம் பொருந்தவெழு மலைத்திருவ
னெனும்பெயருந் தாங்கினன் செம்
பொன்னாரம் புயன்சேறைச் சுந்தரதா
சேந்திரனும் புகழ்க்கோ மானே.

அக்காலத்தில் ஷை மஹாராஜா அவர்கள் மதுரையில் நாகபட்டினம் வக்கீல் மக-ா-ா-ஸ்ரீ சுப்பிரமணியய்யரவர்கள், வக்கில் மக-ா-ா-ஸ்ரீ மாதவையரவர்கள் முதலிய நண்பர்கள் பலர்க்கும் விருந்து

செய்தபோது சொல்லிய கவி

அந்நாளோர் காவலவ னெழுமலையுற்
றமுதசுரர்க் களித்தா னேனும்
இந்நாட்சுந் தரதாச காவலவ
னெழுமலையுற் றிட்ட போது
முன்னாக வளித்தவமு தினுக்கிணையா
மோபுலவீர் முன்னுங் காலைப்
பன்னாளு மஃதுகடை பட்டதுதா
னிதமுதன்மைப் பாற்றுத் தானே.

மாடமலி தென்சேறைச் சுந்தரதா
சன்னல் சமவாயந் தன்னில்
நாடுபுகழ் முத்தைய பாகவதர்
சத்தசுரம் நலம்பெற் றோங்கப்
பாடுவதைக் கேட்டின் மற்றோர் போற் சிரத்தை
யசைப்பனெனப் பார்த்து வேதன்
சேடனுக்குக் காதமையா திருந்ததுமிவ்
வுலகைநிலை செய்யத்தானே.

இக்கவிதை மூன்றும் பாரசுவரையுஞ் சொல்லி
நான்காம் பாரசைச் சேடனுக்கென்று சொன்னவுட
னே பின்வருங் கற்பனையை முன்னமே தேர்ந்து டை

மஹாராஜாவவர்கள் சபாஷ் என்று சொன்னதற்கு உடனே சொல்லிய கவி

முன்னமுப ரங்கமன்னன் கவிகேட்டுச்
 சிரமசைத்தன் முக்ய லக்ஷம்
பொன்னெனச்சொல் லும்புலவீர் சுந்தரதா
 சேந்திரனைப் போலெப் பாவும்
பின்வருங்கற் பனையிஃதென் றறிந்துசபா
 சென்றதுண்டோ பேசுங்கா லிம்
மன்னரிரு வரிலெவரோ தமிழ்த்திறமுற்
 றுந்தெரிந்தோர் வழுத்துவீரே.

மேற்படியார் மருகர் தூத்துக்குடியிலிருக்கும் தெ. குழந்தைவேலுப்பிள்ளையவர்கள் இயற்றியது

ஒருமலையாஞ்சேறைவட மலைத்திருவ
 ஞநனென வோங்குந்திவ்ய
தருமதுரைச் சுந்தரதா சுப்பாண்ட்ய
 தயாநிதியித் தரணியெல்லாம்
பெருமனதா யெழுமலைப் பூமியையும் பெற்
 றெட்டென்னும் பெயரைக்கொண்ட
பருமலைதாங் குலகனைத்துங் கைக்கொண்டா
 னின்றென்றே பகருவேனே.

ஷை மஹாராஜா அவர்களின் மாணாக்கரும், சமஸ்தான வித்வானுமாகிய எம். ஆர். கந்தசாமிக் கவிராயரவர்களியற்றிய கவிகள்

அருட்கடவு டிறத்துமன்பர் திறம்பெரிதென்
பார்தெளித்தற் கனவி யோடு
பாற்குழுவைச் சான்றென்பா ரொன்றுபய
னின்றென்று பன்பாய்க் கண்டத்
திருட்பொலிவோ னொருமலையை வாங்கிக்கைக்
கொண்டனனவ் வீசற்கன்பன்
குருப்புகழ்சுந் தரதாச னெழுமலையை
வாங்கிக்கைக் கொண்டான் மன்றே.

மெய்த்தபுகழ்ச் சுந்தரதா சேந்திரவித்
தகவீண்டுன் விறலைநோக்கிச்
சத்தவரை நிதம்புரப்பா யென்பரிந்தப்
புடவியினர் தமியே னீர்கும்
இந்தரணி தோன்றியநாட் டொட்டுனது
குலத்துதித்தோ ரெவரு மென்றுஞ்
சத்தவரை யுரிமையொடு காக்கின்றீ
ரென்பனிது சரதந் தானே.

திருமருவுங் கனசமுகா சுந்தரதா
சேந்திராஞ் சிதனே சின்னைப்

பொருவிலெழுமலைமார்ப னெனவமர்செய்
போதின்மட்டும் புகன்றே மிந்நாள்
தருவனையாய் சத்தமலை யாட்சிதனைக்
கெய்துபெருந் தகவாலென்றும்
பெருநிலமுள் ளளவுமுனை யெழுமலைமார்
புடையையெனப் பேசுவோமே.

மாதரணி காவலவன் கலைமிருந்த
மதிக்குடையார் மன்னனென்றே
ஓதுவதாற் பெயர்ப்பொலிவா லுருவமத
னெனவுலகோ ருரைத்தற்கேற்ப
நாதமிகு புகழ்ச்சேறைச் சுந்தரதா
சேந்திரமா நகுலா நீயிப்
போதிலெழு மலைதிகரா வுற்றதுவு
மிகப்பெரிய பொருத்தந்தானே.

---

முப்பத்திரண்டடி யாசிரியம்.

திருமேவு செங்கமல மலர்வனிதை யகலாது
தினமு நடமிடு சமூகன்
திவ்யமது ரப்ரசங் கப்ரவா கப்புணரி
சேர்ந்துலவு பெரிய வங்கம்

செந்தமிழ்ப் பாவாணர் வேண்டுவவெடுக்கச்
செழித்திடு மணிப்பொக்கிஷம்
திக்கெலாங் கீர்த்தியொளி தைக்கவே காத்துவரு
திவ்யதர ரத்நதீபம்
செகராச ரோடு நாற் கவிராசர் முடிமீது
செறியுமரகத கிரீடம்
தேடியென் றுற்றவர்கள் போகியம் பெற்றிடச்
செய்துமகிழ் தெய்வதாரு
திக்குடை தரித்தவ ரருட்பிரகா சத்தினொளி
திகழ்சைவ மதபூஷணம்
தென்சேறை நகரினிற் பொன்சேரவே யரசு
செய்துவரு வீரசிங்கம்
மருமேவு முல்லையொடு மரன்மாதர் கண்மாலை
வளையுமுயர் புயபர்வதம்
மண்டலத் தண்டினர்கள் கண்டுமெகிழ் கொண்டுபுனை
மங்கள சுகந்தபுஷ்பம்
மன்னுசீர் முத்துச்சு வாமிமால் புரிதவம்
வளர்த்திட்ட பெரிய செல்வம்
வாட்டுபசி தாக்குறு முயிர்ப்பயிர் களுக்குப்பொன்
மாரிபொழி கருணைமேகம்
மகிழ் சுதந்தரமாக மருவுசுந் தரதாச
மகிபவிக்கிரம தேசிகேன்

மாநிலத் திற்செல்வர் கல்வியுற லரிதனை
வளர்த்திடுதன் மிகவுமரிது
மருவுநிதி யினைவளர்த் திடலரிது பெற்றநிதி
மங்காது காத்த லரிது
வாளுனை வீணுள் படச்செய்கு வாரதன்
மனத்தினி னினைத்தல் புரியார்
பொருண் மேவு வேளையிற் பிறர்கேடு நோக்கியே
பூரிப்பர் கொடையுற்றிடார்
போலிப் பிரபுக்களிவர் புத்தியுறு மாறுநற்
பொருளிரண்டையும் வளர்த்துப்
பொலிவினொடு பிறர்வாழ்வை யேயெண்ணி நயமொழி
புகன்று சற்பாத்திரற்கே
போதுமட் டுஞ்செலவு செய்துவரு நின் பெருமை
புகலுதற் கெளிதாகுமோ
புனிதமதி மூர்த்தியெழு மலையையுறு மன்னதே
போலநின் புந்திமதியும்
பொங்கியெழு மலைமீது தங்கியது நின்னன்பு
பூரணமதாக வுற்ற
பொற்பினன் பாணனுள் நாணவிசை பாடிவரு
புண்ணியன் மிகுந்த கன்யன்
பொய்த்தவுரை புகலா நிசத்துரைசெய் முத்தைய
பூசுர வுதாரனுடனே

தருமேவு பெருவாழ்வு வரினுமதி யானுனது
    தயவே மதிக்கு மதியான்
தாராள குணமுளான் காராளர் குலமுறு
    தவத்திற் பிறந்த சுமுகன்
சாற்றுமந் திரிமார்க ளாற்றுதொழின் முற்றுந்
    தனித்தனி தெரிந்தயூகன்
தன்னைமறு மருவாவி ராக்கப்ப னென்னுமுத்
    தமிழ் தெரிந் திட்டவேளும்
தமையிராக் கப்பன்முத் தையனென் றுலகோர்கள்
    சாற்றுதற்கேற்ப வனையார்
தம்மதியு மெழுமலையை மேவச்செய் தாரதைத்
    தகுதியிற் கைக்கொண்டனை
சற்சனர் களுக்குமா நேசராம் ராக்கப்ப
    தருமற் கதற்கு மானே
சர்க்குரிய வதிகார மீந்தனையுன் மதிவலிமை
    சாற்றுதற் கரிதுமாதோ.

முற்றிற்று.